24th March 1958]

*Co-operative looms*

* 387 Q.—Sri M. S. SELVARAJAN (on behalf of Sri A. R. Subbiah Mudaliar): Will the Hon. the Minister for Industries be pleased to state the percentage of looms brought into the co-operativefold in 1956–57?

The Hon. Sri R. VENKATARAMAN : About seven per cent of the total number of looms in the State, viz., 31,000 looms were brought into the co-operativefold in 1956–57.

Sri M. S. SELVARAJAN : மீதியுள்ளவர்களையும் கூட்டுறவு முறையின் கீழ் கொண்டுவருவதற்கு அரசாங்கம் எடுத்துக்கொண்டிருக்கும் நடவடிக்கை என்னவென்பதை அறிய விரும்புகிறேன்.

The Hon. Sri R. VENKATARAMAN : நெசவாளர்கள் கூட்டுறவுத் துறையில் சேர, ஷேர் காபிடலுக்கு கடன் கொடுக்கிறார்கள்; சேர்ந்த பிறகு கூட்டுறவு சொஸைட்டியிலே நடைமுறை செலவுக்கான "ஒர்க்கிங் பண்டு"ம் கடனாகக் கொடுக்கிறார்கள். கூட்டுறவு இயக்கத்தில் சேர்ந்தவர்களுடைய சொஸைட்டி விற்பனை செய்யும் பண்டங்களுக்கு "ரிபேட்" கொடுக்கிறார்கள். இதைத்தவிர, நல்ல உயர்ந்த உபகரணங்கள் (improved attachments, reels) போன்றவையெல்லாம் அளிக்கப்படுகின்றன. வெகுவேகமாக இன்றைக்கு கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவு இயக்கத்தில் சேர்ந்து கொண்டு வருகிறார்கள். இன்றைய எண்ணிக்கை—இரண்டு லட்சம் தறிகளுக்கு மேல் கூட்டுறவு இயக்கத்தில் சேர்க்கப்பட்டிருக்கின்றன என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

Sri P. G. MANICKAM : கூட்டுறவு இயக்கத்தில் சேராத கைத்தறி நெசவாளர்களுக்கு "செஸ்" நிதியிலிருந்து எந்தெந்த முறையிலே உதவி அளிக்கப்படுகிறது.

The Hon. Sri R. VENKATARAMAN : உதவி அளிக்கப்படவில்லை.

Sri K. RAMACHANDRAN : கூட்டுறவு இயக்கத்தில் தறிகள் சேர்க்கப்பட்டிருந்தும்கூட, சுமார் மூன்றிலொரு பங்கு தறிகள்தான் கூட்டுறவு இயக்கத்தில் இப்பொழுது சேர்க்கப்பட்டிருக்கின்றன என்று நான் நினைக்கிறேன். ஆகையால், வருஷத்திற்கு ஒரு குறிப்பிட்ட வீதமாவது சேர வேண்டுமென்ற முறையில், அவர்களை ஊக்குவிக்கும் விஷயத்தில் ஏதாவது "டார்ஜெட்" ஏற்படுத்தி, இந்தத் தறிகளையெல்லாம் கூட்டுறவு இயக்கத்தின்கீழ் கொண்டுவர உத்தேசம் இருக்கிறதா?

The Hon. Sri R. VENKATARAMAN : 1956–57-ம் வருஷத்திற்கு டார்ஜெட் 21,000 தறிகள். ஆனால், நாம் சேர்த்த எண்ணிக்கை 31,000 ஆக, டார்ஜெட்டுக்கு அதிகமாகத்தான் நாம் சேர்த்துக்கொண்டு வருகிறோம்.

Sri M. D. RAMASAMI : கூட்டுறவு முறையில் சேராத தறிக்காரர்களுக்கு எந்த வகையிலாவது உதவி செய்ய சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

The Hon. Sri R. VENKATARAMAN : கூட்டுறவு முறையில் சேராத நெசவாளர்களுக்குக்கூட உதவி செய்ய வேண்டும் என்பதுதான் இந்த ராஜ்ய சர்க்காருடைய கொள்கை. அதை செஸ் நிதியை நிர்வகித்து நடத்துகிற அகில இந்திய கைத்தறி போர்டாரிடம் நாங்கள் பன்முறை வற்புறுத்தினோம். ஆனால், மத்திய சர்க்கார் ஏற்றுக்கொள்ளவில்லை. கூட்டுறவு இயக்கத்தில் சேர்ந்தவர்களுக்குத் தான் இந்த உதவி கொடுக்கப்படும் என்று அவர்கள் தீர்மானித்துவிட்டார்கள்.